# TIMON OF ATHENS



அத்தேனே நகரத்து

# தைமன் சரித்திரம்





THE CHRISTIAN LITERATURE SOCIETY

MADRAS, COLOMBO AND LONDON

1910



அத்தேனே நகரத்து

# தைமன் சரித்திரம்

அத்தேனே நகரத்தில் தைமன் என்னும் ஒரு பிரபு இருந்தான். அவன் பெருத்த சம்பத்தும் இணையற்ற உதார குணமுமுள்ளவன். அவனுடைய அளவற்ற செல்வமானது, எவ்வளவு செலவுசெய்தாலும் குறையாது. அதை அவன் சமஸ்தமான ஜனங்கள் விஷயங்களிலும் கண்டபடி செலவுசெய்துவந்தான். ஏழைகளிடத்தில் தன் உதார குணத்தைக் காண்பிப்பது தகுதியானதுதான். ஆனால் அவர்கள் மாத்திரமல்ல, தங்கள் கவுரவத்துக்குக் குறைவென்று நினையாமல் பெருத்த பிரபுக்கள்கூட அவன் பரிவாரத்தில் சேர்ந்து, அவனைச் சுற்றிக்கொண்டிருந்தனர். போஜனப்பிரியர் எல்லாரும் அவன் வீட்டுக்கு வந்து விடுவார்கள். அத்தேனே நகரத்தில் வந்தவர்கள் போனவர்கள் எல்லோருக்கும் அவன் வீடு எப்பொழுதும் திறந்திருக்கும். அவனுடைய பெருத்த சம்பத்தையும் தாராளமாய்ச் செலவழிக்கும் உதாரகுணத்தையும் பார்த்து, எல்லோரும் அவனிடத்தில் அன்புள்ளவர்களைப்போல நடித்தார்கள். உலகத்தில் சிலர் முகஸ்துதிசெய்து ஜீவனம் செய்கிறார்கள். அவர்களுடைய முகத்தைக் கண்ணாடிக்கொப்பாகச் சொல்ல

லாம்; ஏனென்றால் எப்படிக் கண்ணாடியானது தன் அண்டையில் வரும் வஸ்துவைக் காட்டுகிறதோ, அப்படி முகஸ்துதிகாரர் தாங்கள் அடுத்திருப்பவர்களுடைய குணத்தின்படி, தங்கள் முகத்தை வைத்துக்கொண்டு பேசுகிறார்கள். சிலர் உலக சுகங்களில் சற்றேனும் பற்றில்லாதவர்போல், ஒருவருக்கும் இணங்காமல் முரட்டுத்தனமாய் நடக்கிறார்கள். அவர்கள் மானிடர்களிடத்தில் வெகு அலக்ஷியம் உள்ளவர்களைப்போலும், உலகவிஷயங்களில் பற்றில்லாதவர்போலும் நடிக்கின்றனர். ஆயினும் அவர்களும், தைமன் பிரபுவின் இனிய நடக்கைக்கும், உதாரகுணத்துக்கும் இணங்கி, தங்கள் இயல்புக்கு மாறாக அவனுடைய ராஜ போஜனத்துக்கு ஆசைப்பட்டு வருவார்கள். தங்களைத் தைமன் பார்த்து வந்தனம் செய்தாலும், அல்லது சும்மா தலை அசைத்தாலும், குபேரசம்பத்து வந்தாற்போல் நினைத்துக் கொண்டு போவார்கள். இவ்வாறு இச்சகம் பேசுகிறவர்கள் முதல், இல்லறம்விட்ட துறவிகள்வரைக்கும் உள்ள பற்பலவிதமான மனிதர்கள் எல்லோரும், தைமன் பிரபுவுக்கு இணங்கி அவன் இஷ்டப்படி நடந்துவந்தனர்.

கவிகள் புதிதாய்க் காவியங்களைச் செய்து, அவற்றை உலகத்தாருக்குப் பிரசித்தப் படுத்தவேண்டுமானால், வேறு ஒன்றும் செய்யாமல், அவற்றைத் தைமன் பிரபுவின் பேருக்கு அர்ப்பிதம் செய்வார்கள். உடனே அவை தப்பாமல் விலையாய்விடும். அன்றியும் தைமன் அவர்களுக்கு வேண்டிய பொருளை வெகுமதியாய்க் கொடுப்பான். அதுமுதல் அவர்கள், அவன் வீட்டில் நாள்தோறும் வந்து சாப்பிடலாம். சித்திரம் எழுதுகிறவர்கள் படமெழுதினால், அது எப்படி இருக்கிறதென்று அவனைக் கேட்பவர்போல் அவனிடம் கொண்டுபோனால் போதும். உடனே அந்த உதாரகுணமுள்ள பிரபு, மற்றொன்றும் விசாரிக்காமல் அதை வாங்கிக்

கொள்ளுவான். ஒரு இரத்தின வியாபாரியினிடத்தில் விலை உயர்ந்த இரத்தினமிருந்தாலும், அல்லது பட்டுவர்த்தகனிடத்தில் மேன்மையான பட்டாடைகள் விலைபோகாமல் இருந்தாலும், அவர்களுக்கெல்லாம் தைமன் பிரபுவின் வீடு, எப்பொழுதும் திறந்திருக்கும் பெருத்த கடையாயிருந்தது. அங்கே தங்கள் சரக்குக்களையும், இரத்தினங்களையும் தோன்றின விலைக்கு விற்றுப்போடுவார்கள். இப்படி அவற்றைப் பணம்கொடுத்து வாங்குவதோடு, அவ்வர்த்தகர்கள் தன் அனுமதியில்லாமல் வேறிடங்களுக்கு அந்த விலையுயர்ந்த சரக்குக்களைக் கொண்டுபோகாததினால் தன்னை மிகவும் கவுரவப்படுத்தினதுபோல் அந்தப் பிரபு நினைத்து வெகு வினயமாய் அவர்களுக்கு வந்தனம்செய்வான். இவ்வாறு அவன் வீட்டில் அவசியமில்லாத பல வஸ்துக்கள் நிறைந்திருந்தன. அவற்றால் வீணான ஜம்பம் அதிகரித்ததேயொழிய பிரயோஜனம் ஒன்றும் இல்லை. அவன் வீடு இந்தக் கதியாயிருக்க முன் சொன்னவர்களாகிய பொய்க் கற்பனைகளைச்சொல்லும் கவிகளும், சித்திரக்காரரும், பிடுங்கித்தின்னும் வியாபாரிகளும், பிரபுக்களும், அவர்கள் சீமாட்டிகளும், சோற்றுக்கில்லாத வீண் டம்பர்களும், அவன் உதவிக்காக வாய்திறந்துகொண்டிருந்த வேறு பலரும், அவனை விடாமல் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அன்றியும் அவர்கள் அவன் வீட்டில் இடைவிடாமல் கூட்டங்கூடி பரமரகசியம்போல, மெல்லக் காது புளித்துப்போகும்படியான இச்சகவார்த்தைகளைப் பொழிவார்கள். தேவதையை ஸ்துதிசெய்வதுபோல், அவனைப் புகழ்வார்கள்; அவன் குதிரையின் அங்கபடிகூட அவன் பாததூளியினாற் புனிதமாய் விட்டதுபோலச் சொல்லுவார்கள்; அவனுடைய அனுக்கிரகத்தினால்தான் தாங்கள் எதேச்சையாய் வீசும் காற்றை உட்கொள்வதுபோல் நடிப்பார்கள்.

இப்படி அவனை இடைவிடாமல் சுற்றிக்கொண்டிருந்தவர்களில் நல்ல வம்சத்தில் பிறந்த சில வாலிபர் இருந்தனர். அவர்கள் தங்கள் கையிருப்புக்கு மேற்பட்ட வீண் செலவுகளைச் செய்ததினுல் கடன்காரரால் சிறைச்சாலையில் வைக்கப்பட்டனர். அவர்களை தைமன் பிரபு விடுவித்தான். தங்களுக்கு தைமன் பிரபுவுக்குள்ள சம்பத்தில்லாமல் போனபோதிலும், வீண்செலவு செய்யும்விஷயத்தில் அவனுக்கு அவர்கள் குறைந்தவர்கள் அல்ல. ஆகையால், தாங்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்காத அவன் பொருளைத் தலை கால் தெரியாமல் செலவுசெய்யத் தலைப்பட்டனர். இப்படித் தைமன் அவர்களுக்கு இடம்கொடுத்ததினுல், தங்களைப்போன்ற வீண் செலவுக்காரருக்கும், துர்மார்க்கருக்கும் அவன் மிகவும் வேண்டிய மித்திரனுய்விட்டதுபோல் எண்ணி அவன் காலைக் கட்டிக்கொண்டு திரிந்தார்கள். இப்படி அவன் இரத்தத்தை உறிஞ்சிக்கொண்டிருந்த கொசுகுகளில் வெண்டீடியஸ் என்பவன் ஒருவன்; அவன் தாறுமாருய்ச் செலவுசெய்து வெகு கடன்காரனுய் இருந்தான். தைமன் பிரபு கொஞ்சகாலத்துக்குமுன் ஐந்து தாலந்து* களைக் கொடுத்து அவன் கடனைத் தீர்த்தான்.

இப்படி அவனைச் சுற்றிக்கொண்டிருந்த பெருங்கூட்டத்தில் மிகவும் பிரசித்தியடைந்தவர்கள் யாரெனில், அவனுக்கு அடிக்கடி பல வெகுமதிகளைக் கொண்டுவந்து கொடுத்தவர்களேயாம். அவர்கள் இடத்தில் உள்ள நாயையோ, குதிரையையோ, அல்லது அற்பவிலையுள்ள வேறெந்த வஸ்துவையோ, தைமன் பார்த்து நன்றுயிருக்கிறதென்று சொன்னுல் அது அவர்களுக்குப் பெருத்த கந்தாயம். அப்படி அவன் பார்த்து சந்தோஷித்த வஸ்து எதுவானுலும், அதை மறுநாள் காலையில் தைமன் அங்கீகரிக்கும்பொருட்டு வெகு

* ஒரு கிரீக் தாலந்து சுமார் 2437½ ரூபாயுள்ளது.

வந்தனத்தோடு அனுப்புவார்கள். அப்படிப்பட்ட மகாப் பிரபுவுக்கு அந்த அற்பவஸ்துவை அனுப்பினதைப்பற்றி வெகு நாணமுள்ளவர்கள்போலப் பல வினய வார்த்தைகளையும் சொல்லுவார்கள். தைமன் பிரபு அவர்களுக்கு வெகுமதிகளைக் கொடுப்பதில் பின்னிடுகிறவனா? அவர்கள் அனுப்பும் நாயோ, குதிரையோ, அல்லது வேறெந்த வஸ்துவோ, தன்னிடம் வந்தபின் அவைகளுக்குப் பதிலாய் இருபது நாயோ குதிரையோ தப்பாமல் அனுப்புவான். அவை அவர்கள் அனுப்பியதைக்காட்டிலும் வெகு விலையுயர்ந்தவைகளென்பதைக் கேட்கவேண்டுமோ? அது அவனுக்கு வெகுமதிகளை அனுப்பிய மோசக்காரருக்கும் நன்ருய்த் தெரியும். சொற்பதொகையைச் சடுதியில் செலுத்தத்தக்க பெருத்த வட்டிக்குக் கொடுத்தால் அது எப்படி விருத்தியாய்விடுமோ, அப்படியே தைமனுக்கு உபயோகமற்றவைகளை வெகுமதியாய்க் கொடுத்து, அவனால் பெருத்தலாபத்தை அடையலாமென்பது அவர்கள் அறிந்தவிஷயம். இப்படியே, லூசியஸ் என்னும் ஒரு பிரபு, ஓர் சமயத்தில் தன்னிடத்திலுள்ள நான்கு பால்போன்ற வெள்ளைக் குதிரைகளைத் தைமன் சிலாகித்ததைத் தந்திரமாய் அறிந்து உடனே அவற்றை வெள்ளிச்சரிகையுள்ள ஆடைகளால் அலங்கரித்து வெகுமதியாய் அனுப்பினுன். லூகல்லஸ் என்னும் வேருெரு பிரபுவினிடத்தில் இரண்டு வேட்டை நாய்கள் இருந்தன. அவற்றின் உருவத்தையும், வேகத்தையும் தைமன் புகழ்ந்து பேசினதாகக் கேள்விப்பட்டு, அவற்றைத் தானே இஷ்டப்பட்டு அவனுக்கு வெகுமதியாய்க் கொடுத்தாற்போல் அனுப்பினுன். இப்படிக் கொடுத்தவர்களுடைய மோச எண்ணங்களை அறியாமல் கபடமற்ற தைமன் பிரபு அவற்றை வாங்கிக்கொண்டான். தங்கள் சொந்தப் பிரயோசனத்தின்பொருட்டு, வெகுமதி கொடுத்

தாற்போலப் பல அற்பவஸ்துக்களைக் கொடுத்து, அவற்றைக்காட்டிலும் இருபதுபங்கு விலையுள்ள வைரக்கல்லோ, அல்லது வேறெந்த இரத்தினமோ வெகுமதியாக அவனிடத்தில் அடைந்தனர்.

சிலவேளை இந்தத் துராத்துமாக்கள் இப்படிச் சந்துவழியிற்போகாமல் நேராய்த் தங்கள் காரியத்தைச் சாயப்போட்டுக்கொள்ளுவார்கள். அவர்கள் வெளிப்படையாய்ச் செய்யும் கொடிய மோசத்தைத் தைமன் குருடனைப்போலப் பாராமல் நம்பி இருந்தான். ஆகையால் அவர்கள் அவனிடத்திலுள்ள பல வஸ்துக்களில் யாதேனுமொன்றைப் புகழ்வார்கள். அவன் சில காலத்துக்கு முன் எதாவது வாங்கியிருந்தால், அது வெகு நயமாய் வாங்கப்பட்டதென்பார்கள். வேறெந்த வஸ்துவாவது கிரயத்துக்குச் சம்பாதிக்கப்பட்டிருந்தால் அதை வேறுவிதமாய்ச் சிலாகித்துச் சொல்லுவார்கள். இதை, எளிதில் இணங்கும் அன்புள்ள தைமன் பிரபு கேட்டவுடனே அவற்றைக் கொடுத்துவிடுவான். இப்படி இவர்கள் இம்மண்ணுலகில் தைமனுக்கு யாதொரு உபகாரமும் செய்யாமலே வெட்டவெளியாய் விளங்கும் சில இச்சகவார்த்தைகளை இலேசாய்ச் சொல்லி விலையுயர்ந்த பொருள்களையெல்லாம் தட்டிக்கொண்டுபோவார்கள். தைமன் சொந்தத்திற் சவாரிசெய்யும் வெள்ளைக் குதிரையொன்று இருந்தது. அதை முன்பு நன்றாய் வாழ்ந்து பின்பு ஏழையாய்விட்ட ஒரு பிரபு பார்த்து, ஆ! இந்தக்குதிரை எவ்வளவு அழகாயிருக்கிறது. இதின் நடை எவ்வளவு ஒழுங்காயிருக்கிறது என்றான். இதைத் தைமன் கேட்டான். தான் அடையவேண்டுமென்னும் இச்சையில்லாமல் எவனும் ஒரு வஸ்துவைத் துதிக்கமாட்டான் என்பது அவனுக்கு நன்றாய்த் தெரியும். ஆகையால் உடனே அக்குதிரையை அப்பிரபுவுக்குக் கொடுத்துவிட்டான்.

தனக்குத் தன்னுடைய சிநேகிதரிடத்தில் எவ்வளவு அன்பு இருந்ததோ அவ்வளவு அவர்களுக்கும் தன்னிடத்தில் உண்டென்பது தைமன் பிரபுவின் கருத்து. ஆகையால் அவர்களுக்குக் கொடுக்கும் விஷயத்தில் அவனுக்குள்ள ஆவல் இவ்வளவென்று சொல்லிமுடியாது. அவனிடத்தில் பெருத்த இராச்சியங்கள் இருக்குமானால், சிநேகிதரென்று வேஷம்போட்ட அம்மோசக்காரருக்குக் கை சலியாமல் அவற்றைத் தத்தம் செய்துவிடுவான்.

அன்றியும் தைமனுடைய சம்பத்தெல்லாம் இச்சகம் பேசும் இந்தத் துர்மார்க்கர் விஷயத்திலேயே செலவாகவில்லை. அவன் வெகு உதாரகுணத்தோடு, சிலாகிக்கத் தக்க மேன்மையுள்ள காரியங்களையும் செய்தான். அவன் வேலைக்காரரில் ஒருவன் அத்தேனே நகரத்திலுள்ள ஓர் தனிகனுடைய மகளை விவாகம்செய்ய இச்சித்தான்; ஆனால் அப்பெண் செல்வத்திலும் அந்தஸ்திலும் அவனைக்காட்டிலும் வெகு மேன்மையுள்ளவள். ஆகையால் அவளை அடையவேண்டுமென்னும் கோரிக்கை அவனுக்கு ஈடேறாததுபோற் காணப்பட்டது. அதை தைமன் கண்டு, தன் வேலைக்காரனுக்கு மூன்று தாலந்துகளைக் கொடுத்தான். அப்பெண்ணின் தகப்பன், அந்தத் தொகையைக் கொடுப்பவனுக்குத் தன் மகளை விவாகம்செய்து கொடுப்பதாக ஏற்பாடு செய்திருந்ததினால், அந்த வேலைக்காரன் அதைப் பரியமாகக் கொடுத்து அவளை விவாகம் செய்துகொண்டான். ஆனால் பெரும்பாலும், தைமன் பிரபுவின் சம்பத்தை அனுபவித்தவர்கள் மோசக்காரரும், இச்சகம்பேசி வயிறு வளர்ப்பவர்களுமாயிருந்தனர். அவர்களெல்லாரும் மேலுக்குச் சிநேகிதர்போல் நடிக்கும் திருட்டுப்பயல்களென்னும் சங்கதியை அவன் அறியவில்லை. கூட்டங் கூட்டமாய்த் தன்னைச் சுற்றிக்கொண்டிருந்ததினாலேயே

தன்னிடத்தில் அவசியம் அவர்களுக்கு அன்பு இருக்குமென்று நினைத்தான். அவர்கள் தன் முன்னிலையில் நகைமுகம் காட்டித் தோத்திரம் செய்ததினாலேயே ஞானமும் நடுவுநிலைமையும் உள்ள பெரியோரெல்லாம் தன் நடக்கையை அங்கீகரித்ததுபோல் எண்ணினான். இவ்வாறு அவன் இச்சகம் பேசும் அப்பொய்ச்சிநேகர் கூட்டத்தில் விருந்துகள் நடத்தினான். அவர்கள் அவனை அநியாயமாய்ப் பிடுங்கித் தின்றுகொண்டிருந்தார்கள். ஆயுள், ஆரோக்கியம், ஐசுவரியம் இவற்றோடு அவன் வாழவேண்டுமென்று சொல்லிக்கொண்டே மகா விலையும் உருசியும் உள்ள சாராயங்களைக் கிண்ணம் கிண்ணமாய் மொண்டுகுடித்து, அவன் சம்பத்தையெல்லாம் நாசம் செய்துகொண்டிருந்தார்கள். அப்பொழுதெல்லாம் உண்மையான சிநேகிதனுக்கும், இச்சகம் பேசும் திருட்டுப்பயல்களுக்கும் உள்ள வித்தியாசத்தை அவன் தெரிந்துகொள்ளாமற்போனான். அப்பெருங் கூட்டத்தைப்பார்த்து அவன் கண்கள் மயங்கிப்போயின. ஆகையால் அத்தனைபேர் சகோதரர்போலக் கூட்டங்கூடித் தங்கள் சம்பத்துக்களையெல்லாம் ஒன்றாய் அனுபவிப்பது பரமசுகமாய் அவனுக்குத் தோன்றிற்று. இவ்வாறு உண்மையான பல சிநேகிதர்கள் சகோதரர்போல் உல்லாசமாய் உண்டுகளிக்கும்பொருட்டுச் சேர்ந்திருந்தார்களென்று தைமன் நினைத்திருந்தான். ஆகையால் அவர்களைப்பார்த்து, ஆனந்தத்தினால் கண்ணீர் பெருக்குவான். அப்பொழுது அவர்கள் ஒருவரோடொருவர் களித்து உண்ட உணவுகளும், குடித்த சாராயங்களும், இவன் பணம்போட்டு வாங்கினதென்னும் எண்ணம் அவனுக்கு இருக்காது.

இவ்வாறு, தனபதியாகிய குபேரனே தன் உக்கிராணக்காரனாய்விட்டாற்போல, தகுதியுள்ள அன்பின் வரம்பைக் கடந்து, மிதமில்லாமல் செலவழித்து வந்தான். அவன்

செலவில் காவல்கட்டு ஒன்றுங் கிடையாது. தன் விருந்துகளையும் வேடிக்கைகளையும் நடத்துவதற்கு வேண்டிய பணம் எத்தனைநாளைக்கு வருமோ அது அவனுக்குத் தோன்றுகிறதேயில்லை. அவன் சம்பத்தென்ன முடிவில்லாததா? அது எவ்வளவு பெரிதானாலும், கணக்கு வழக்கில்லாமல் இப்படிக் கொள்ளைபோனால் கரையாமல் இருக்குமா? ஆனால் இந்தச் சங்கதியை அவனுடன் சொல்பவர் யார்? இச்சகம் பேசி அவனிடம் பிடுங்கித் தின்பவர்களா? அவர்கள் ஒருக்காலும் சொல்லவேமாட்டார்கள். ஏனென்றால் அவன் கண்ணைக்கட்டி வைத்திருந்தால்தான் அவர்களுக்குப் பயனுண்டு. ஆயினும் அவனிடத்தில் பிளேவியஸ் என்று வெகு சத்தியமுள்ள உக்கிராணக்காரன் ஒருவன் இருந்தான். அவன் தன் எஜமானனுடைய இருப்பை எடுத்துக்காட்ட முயன்றான். வரவு செலவுக்கணக்குகளை அவன்முன் எடுத்துக் கொண்டுவந்து போட்டான். அவற்றைப் பார்க்கும்படி கெஞ்சினான்; கிருபைசெய்யும்படி கேட்டுக்கொண்டான். தன் காரியங்களின் நிலைமையைக் கண்டறியும்படி வேண்டிக் கண்ணீர்விட்டான். வேறெப்பொழுதாவது அவன் அவ்வளவு உறுத்திக்கேட்பானாகில், அது மரியாதைக்குக் குறைவாய்த்தோன்றும். என்ன சொன்னாலும் அதைத் தைமன் காதில் போட்டுக்கொள்ளவில்லை. சொல்லும்போதெல்லாம் அந்தச் சங்கதியை விட்டு வேறு விஷயங்களைப்பற்றிப் பேசுவான். இது ஆச்சரியமல்ல. தனவான்களாயிருந்து வறுமை அடைந்தவர்களுக்குள் இதமான வார்த்தைகளைக் கேட்டவர்கள் கிடையாது. தங்கள் நிலைமை கெட்டுப்போயிற்றென்று சொன்னால் அவர்கள் நம்பவேமாட்டார்கள். தாங்கள் இன்னும் முன்னிருந்த ஸ்திதியிலேயே இருப்பதாயும், தங்களுக்குக் கஷ்டங்கள் ஒன்றும் நேரிடாததுபோலும், வீணான ஆசை

யை வைத்துக்கொள்ளுகிறார்கள். தைமன் விசேஷபொருளை செலவழித்துப் பெருத்த விருந்துகளைச் செய்வான். அவ்வேளைகளில் சாப்பிடும்பொருட்டு, பல வீணர்கள் அவன் வீட்டுக் கூடங்களிலெல்லாம் எள்ளுப்போட்டால் விழ இடமில்லாமல் நெருங்கிக் கோலாகலமாய்க் கூடுவார்கள். அவர்கள் குடிக்கும்போது தரையெல்லாம் கண்ணீர் விட்டழுதாற்போலச் சாராயம் சிந்திப்போகும். பிரதி கூடத்திலும் ஜகஜோதியாய் விளக்குகள் எரியும். சங்கீதமும், உண்டுகளித்துக் கெக்கலிகொட்டும் சத்தமும் எங்கும் முழங்கும். அப்பொழுது மிகவும் நல்ல ஆத்துமாவாகிய அந்த உக்கிராணக்காரன் யாரும் இல்லாத ஓர் மூலைக்குத் தனியாய்ப்போவான். அங்கே "ஐயோ, நம்முடைய பிரபு இப்படி வெறியனைப்போல் வீணாய்ச் செலவழிக்கிறாரே; இவருடைய பணத்தைப்பார்த்தல்லவோ இந்த வீணர்களெல்லாம் இவரை வாய்விட்டுத் துதிசெய்கிறார்கள்; அது போனால் இவர்கள் வாயும் மூடிப்போமே; உண்டுகளிக்கும்போது சம்பாதித்த ஸ்துதிகளெல்லாம், நாளை ஒன்றுமில்லாமல் பட்டினியாய் உபவாசமிருக்கும்போது ஓடிப்போமே; வறுமையென்னும் மாரிகாலத்தின் மேகத்தைக் கண்டமாத்திரத்தில் இந்தக் கூட்டங்கள் நீங்குமே; அப்புறம் நம்முடைய எஜமான் என்னசெய்வார்" என்று தாரை தாரையாய்க் கண்ணீர்விட்டு அழுவான். அவன் கண்ணினின்றும் பெருகிய ஜலம், அந்த வீட்டுக்குள் குடித்துக் கூத்தாடும் வீணர்கள் திறந்த குடங்களினின்றும் ஓடும் சாராயத்தைக்காட்டிலும் வேகமாய்ப் பெருகும்.

அந்த அன்புள்ள உக்கிராணக்காரன் சொல்லிக்கொண்டு வந்த இதமான வார்த்தைகளைக் காதுகொடுத்துக் கேளாமல் இருக்கத்தக்ககாலம் போய்விட்டது. கையில் இருந்த காசு வறண்டது. ஆகையால் தைமன் தன் நிலங்களிற் சிலவற்

றைவிற்றுச் செலவுக்கு வைத்துக்கொள்ளும்படி பிளேவியஸ் உடன் சொன்னான். அதற்குப் பிளேவியஸ் "ஸ்வாமி! அதைப்பற்றிய சங்கதிகளைத்தான் தங்களுடன் நான் பல முறை சொல்ல முயன்றது; ஆனால் அவற்றைத் தாங்கள் காதுகொடுத்துக் கேட்கவில்லை. தங்கள் நிலங்கள் பெரும் பாலும் விற்கப்பட்டன; அல்லது ஒற்றிவைத்துக்கொண்டு கடன்கொடுத்தவர்களிடத்தில் வட்டியில் மூழ்கிப்போயின. தங்களுக்கு இப்பொழுது இருக்கும் சொத்துக்களெல்லாம் தங்களுக்குள்ள கடனில் பாதிக்குக்கூட ஈடாகமாட்டாது" என்றான். இப்படி அவன் சொன்னதைக்கேட்டு, தைமன் ஆச்சரியத்தினால் திடுக்கிட்டு "என்னுடைய நிலங்கள் அத்தேனே முதல் லாஸிடீமன் வரையில் இருந்தனவே" என்றான். அதற்கு பிளேவியஸ் "ஆம், ஸ்வாமி; தாங்கள் சொல்வது உண்மைதான். இப்பூமி என்ன ஒரு உலகம் தானே, அதற்கும் எல்லையுண்டல்லவா. அப்படிப்பட்ட பிரபஞ்சம்கூட தங்கள் கையில் அகப்பட்டால் ஒரு நொடியில் போய்விடுமே" என்று கண்ணீர்விட்டு அழுதான்.

இதைக் கேட்டுத் தைமன் "நாம் துர்வினியோகம் ஒன்றும் செய்யவில்லை. முன்பின் பாராமல் நம்முடைய சம்பத்தைச் செலவழித்துவிட்டது உண்மைதான். ஆனால் அதைத் துர்நடத்தைகளில் உபயோகப்படுத்தினோமா? இல்லையே! நம்முடைய சிநேகிதரைத் திருப்தி செய்வதிலே தானே செலவழித்தோம். ஆகையால் அப்பா, பிளேவியஸ், நீ வீணாய் அழாதே; உனக்கு நம்மிடத்திலுள்ள அன்பை நாம் அறிவோம். இப்போது நமக்குக் குறைவு ஒன்றுமில்லை, இத்துணை உதாரகுணமுள்ள உத்தம சிநேகிதர்களிருக்கையில் நமக்குப் பணமில்லாமற்போமா?" என்று தனக்குத்தானே சமாதானம் சொல்லிக்கொண்டான். இவ்வாறு தைமன் மதிமயங்கிப்போய் "இப்போது நாம்

வேறொன்றும் செய்யவேண்டியதில்லை. கடன் கேட்க மனிதரை அனுப்பவேண்டியது. நம்முடைய சம்பத்தை யார் யார் அனுபவித்தார்களோ அவர்களுடைய பொருளையெல்லாம் நம்முடைய கைப்பணம்போல் இப்போது உபயோகித்துக்கொள்ளலாம்" என்று வீணை நம்பிக்கை உண்டுபண்ணிக்கொண்டான். உடனே வெகு சந்தோஷமாய்த் தான் செய்யப்போகிற பிரயத்தனம் ஈடேறிவிட்டாற்போல, லூசியஸ், லுகல்லஸ், ஸேம்புரோனியஸ் என்னும் பிரபுக்களிடம் ஒவ்வொருவரிடம் ஐம்பது தாலந்து வாங்கிவரும்படி வெவ்வேறாய் மனிதரை அனுப்பினான். இவர்களெல்லாம் கணக்கு வழக்கில்லாமல் முன் அவன் சொத்தைச் சாப்பிட்டவர்கள்.

வெண்டீடியஸ் என்று வேறொரு பிரபு இருந்தானல்லவா? இவனைக் கடன்காரர்கள் சிறைச்சாலையில் அடைத்தபோது, அக்கடனுக்காக ஐந்து தாலந்து கொடுத்துத் தைமன் விடுவித்தான். இப்போது இவன் தந்தை இறந்ததினால் அவனுடைய பெருத்த சம்பத்தையெல்லாம் இவனே அடைந்து தைமன் செய்த உதவிக்குப் பிரதியுபகாரம் செய்யத்தக்க நல்ல ஸ்திதியில் இருந்தான். ஆகையால் தன்னிடம் பெற்றுக்கொண்ட ஐந்து தாலந்தையும் கொடுத்தனுப்பும்படி அவனிடத்துக்கும் மனிதனை அனுப்பினான். இப்படி மனிதர்களை அனுப்பினபோது, தனக்கு வேண்டுமானால் ஐம்பது தாலந்துமாத்திரமல்ல, ஐந்நூறு ஐம்பது தாலந்துகளைக் கேட்டனுப்பினாலும் கொடுத்தனுப்புவார்களென்பது அவனுடைய உறுதியான நம்பிக்கை.

முதலில் லுகல்லஸ் இடம் மனிதன் போனான். பிரபுவென்று பேர்வைத்துக்கொண்டிருந்த அந்த நீசன், தனக்கு ஓர் வெள்ளிப் பாத்திரமும், கிண்ணமும் கிடைத்தாற்போல் இரவெல்லாம் கனவு கண்டுகொண்டிருந்தான்.

ஆகையால், தைமனுடைய வேலேக்காரன் வந்தானென்னும் சேதி கேட்டவுடனே தன் சொப்பனம் பலித்ததாகவும், அந்த வஸ்துக்களைத் தனக்கு வெகுமதியாய்த் தைமன் அனுப்பியதாகவும் அந்த அற்பனுடைய மனதில் பட்டது. ஆனல் உண்மை இன்னதென்றும், தைமன் தன்னிடத்தில் கடன்கேட்கும்படி மனிதனை அனுப்பினனென்றும் தெரிந்தவுடனே நீர்மேல் எழுத்தைப்போல் நிலேயில்லாத அவன் சிநேகத்தின் தன்மை வெளிப்பட்டது. அவன் அந்த வேலேக்காரனைப்பார்த்து, பல நீதிகளை எடுத்துச்சொல்லி, "ஓ! உங்களுடைய எஜமானன் இப்படி அநியாயமாய்க் கெட்டுப்போவானென்று எனக்கு வெகுகாலமாய்த் தெரியும். பலமுறை இந்தச் சங்கதியை அவனுக்கு எடுத்துக் காட்டி மிதமாய்ச்செலவழிக்கும்படி சொல்லும்பொருட்டே பகற்போசனத்துக்கு வந்தேன்; அப்போது சரிப்படாமல் போனல், மறுபடியும் இராத்திரிப்போசனத்துக்கும் வந்தேன். ஆனல் நான் என்னசொன்னலும், அவன் கேட்காமல் போய்விட்டான்" என்முன். இவ்வாறு அவன் சொன்னபடியே தைமன் செய்த விருந்துகளுக்கு அடிக்கடி வந்துகொண்டிருந்தது உண்மையே. விருந்துகளில் மாத்திரமல்லாமல் வேறு பெருத்த விஷயங்களிலும் அவன் தைமனுடைய சம்பத்தைப் பலமுறை அநுபவித்தான். ஆனல் தைமனுக்குப் புத்திசொல்லவாவது, அவனைக் கண்டிக்கும் பொருட்டாவது, இவன் அவன் வீட்டுக்குப் போனனென்பது கெட்ட வீண்புளுகு. இப்படிப் புளுகினதோடு அந்த வேலேக்காரனைப்பார்த்து "அடா, நாம் வீட்டில் இல்லேயென்று உன்னுடைய எஜமானனிடத்தில் சொல்லிப் போடு" என்று அவனுக்கு அந்த அற்பன் கொஞ்சம் இலஞ்சம் கொடுத்தனுப்பினன்.

லூசியஸ் பிரபுவிடம் போனவனும் அதேகதியானுன். அந்தப் புளுகன் தைமன் சோற்றைத்தின்று வளர்ந்தவன். அவன் உடம்பெல்லாம் அவன் சொத்துத்தான். அவனுக்குத் தைமன் வேண்டியமட்டும் வெகுமதியாய்க்கொடுத்த வஸ்துக்கள் இவ்வளவென்று சொல்லிமுடியாது. அவற்ருல் அவன் சம்பத்தானது பெருத்துத் தலைக்குமேல் வெள்ளமாய்விட்டது. அப்படிப்பட்டவன் தைமனுடைய காலம் மாறிப்போய் எல்லையின்றிப் பெருகிய அவன் உதாரகுணத்தின் உற்பத்தி ஸ்தானமான பெருத்த சம்பத்து வறண்டதென்பதைக் கேட்டுத் திடுக்கிட்டு, அதை நம்பாதவன் போலச் சற்றுநேரம் நின்ருன். அப்புறம் அது உண்மையென்று வேலைக்காரன் சொல்ல “அடடா! என்னகாலம் வந்துவிட்டது. இந்த வேளைக்குச் சரியாய் நம்மிடத்தில் பணமில்லாமல் போகவேண்டுமோ! நேற்றுத்தான் வெகு விலையுள்ள சில வஸ்துக்களை வாங்கினேன். அதனுல் கையிலிருந்த பணமெல்லாம் போய்விட்டது. இவ்வளவு பிரியமான சிநேகிதன் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கையில் முகூர்த்தம் தப்பிப்போகிறதுபோல் கையிலுள்ள பணம் எல்லாம் சரியாய் நேற்றுச் செலழித்துவிட்டேனே. நான் எவ்வளவு துரோகி. இப்படிப்பட்ட கவுரவமுள்ள பெரிய மனிதனுக்கு உதவிசெய்ய முடியாமற்போயிற்றே; இதைவிட கஷ்டம் என்ன இருக்கப்போகிறது” என்று வெகு விசனப்படுகிறவன்போல் வேஷம்போட்டான். தான் முன்னுள் எதுவோ வாங்கினதாகச் சொன்னுனே அது சுத்தப் பொய்.

உலகம் இப்படி கெட்டுப்போனுல், ஒரு கிண்ணத்தில் சாப்பிட்டவர்கள் கூட எப்படி ஒருவரை ஒருவர் சிநேகிதராக நினைக்கலாம். இச்சகம்பேசுகிறவர்களுடைய தன்மையெல்லாம் இப்படித்தான். தைமன் இந்த லூசியஸ் என்ப

வனுக்குத் தகப்பனைப்போல் இருந்தான். அவன் கடன்களையெல்லாம் தானே தீர்த்தான். அவன் வேலைக்காரருடைய சம்பளத்தைத் தானே கொடுத்தான். லூசியஸ் தனக்குள்ள வீடு போதாதென்று வெகு ஜம்பமாய்ப் பெருத்த மாளிகைகளை நிருமித்தான். அவற்றை வேர்வை சொட்டும்படி வருந்திக்கட்டின ஆட்களுடைய கூலியெல்லாம் தைமனே கொடுத்தான். இவைகளெல்லாம் எல்லோரும் பார்த்தவிஷயமே. ஆ! நன்றியற்ற மனிதனை விட கொடிய ஜந்துவென்ன இருக்கிறது. இப்படிப்பட்ட லூசியஸ் என்பவன் தைமனுக்கு ஐம்பது தாலந்து இல்லையென்றானே. அவன் தைமனிடத்திற் பெற்றுக்கொண்டவைகளை எண்ணிப்பார்க்கையில், அவன் கேட்டனுப்பிய தொகை தருமவான்கள் பிச்சைக்காரருக்குக் கொடுக்கும் காசுக்குச் சரியாமா?

அப்படியே தைமன் கேட்டனுப்பிய ஸெம்புரோனியஸ் முதலிய மோசக்காரரெல்லாம் பல சாக்குகளைச் சொல்லித் தப்பித்துக்கொண்டார்கள். சிலர் கண்டிப்பாய் இல்லையென்று சொல்லிவிட்டார்கள். தைமன் பணம்கொடுத்து விடுவித்த வென்டீடியஸ் என்பவனும், இப்பொழுது வெகு பணக்காரனாய் இருந்தும், தனக்கு அவன் அன்போடு வெகு மதியாய்க் கொடுத்து உதவிசெய்த ஐந்துதாலத்தைக்கூடக் கொடுக்கமாட்டேன் என்றான்.

முன் தைமனுக்கு சம்பத்திருந்தகாலத்தில் அவனை எல்லோரும் எவ்வளவு நெருங்கி அனுசரித்திருந்தார்களோ அவ்வளவும் இப்பொழுது அவன் முகம் பாராமல் ஒதுங்கி நின்றார்கள். முன் அவனை "கைகூசாமல் கேட்டதைக் கொடுக்கும் கர்னன்" என்று துதித்த நாவுகளே இப்பொழுது வெட்கமில்லாமல், "இந்தத் தைமன் வெகு மூடன்; அல்லாமற்போனால் தலைகால் தெரியாமல் செலவழித்து

இப்படி ஓட்டாண்டியாய்விடுவாஞ" என்று அவன் உதார குணத்தைத் தூஷித்தனர். அவனே மூடனென்பது ஒருவிஷ யத்தில் சரிதான். இப்படிப்பட்ட துராத்துமாக்களுக்காக தன் பொருளையெல்லாம் செலவழித்தது தப்பிதம்,தானே. இப்பொழுது தைமனுடைய மாளிகையை ஒருவரும் எட் டிப்பார்ப்பது கிடையாது. அதனிடத்தில் எல்லோருக்கும் ஒரு வெறுப்புண்டாய் அதைக் கண்ணெடுத்துக்கூடப் பார்ப்பதில்லை. அந்த வழியாய்ப் போகிறவர்கள் தங்கள் பாட்டுக்கு நேராய்ப் போவார்களேயொழிய முன்போல் அதற்குள் செல்லார்கள். இப்பொழுது வருகிறவனுக்கெல் லாம் சாராயமும் சாப்பாடும் கொடுப்பவர்கள் யார்? கோலாகலமாய் உண்டுகளிக்கும் விருந்தாளிகள் அந்த மாளிகையில் நிறைந்திருப்பதுபோய், கூச்சலிட்டு அவசரப் படுத்தும் கடன்காரரும், அநியாய வட்டிக்காரரும், பல வாய் இம்சைசெய்து பணம்பிடுங்க வந்தவர்களும் சுற்றிக் கொண்டார்கள். அவர்களோ என்ன சமாதானம் சொன் ஞலும் கேளாத கொடியவர்கள். "இதோ பார்! நீ எழு திக்கொடுத்த பத்திரங்கள் இருக்கின்றன. எங்களுக்குக் கொடுக்கவேண்டிய வட்டியெங்கே? நீ வைத்திருக்கும் ஈடு களுக்கென்ன சொல்லுகிருய்" என்று அவனைச் சுற்றிக் கொண்டு அவன் பிராணனே வாங்கினுர்கள். இல்லையென் ருலும், சற்றுப்பொறு என்ருலும் கேட்கவில்லை. ஆகை யால் தைமனுக்குத் தன் வீடே சிறைச்சாலையாய்விட்டது. அவர்கள் செய்யும் உபத்திரவத்தினுல் உள்ளே போகவும், வெளியே வரவும் அவனுக்குச் சரிப்படவில்லை. ஒருவன் தனக்கு ஐம்பது தாலந்து சேரவேண்டுமென்ருன். மற் ெருருவன் தனக்கு ஐயாயிரம் கிரவுன் சேரவேண்டுமென்று பத்திரத்தைக்காட்டினுன். இந்தப் பணத்துக்குப் பதிலா கத் தைமன் தன் இரத்தத்தைத் துளிதுளியாய்க் கணக்

கிட்டுக் கொடுக்கவேண்டுமென்றாலும் போதுமான இரத்தம் அவன் உடம்பில் இல்லை.

இதையெல்லாம் கண்டு, "தைமன் முழுதும் கெட்டுப் போய்விட்டான்; இனிமேல் தலையெடுப்பதில்லை" என்று எல்லோரும் நினைத்தார்கள். இப்படி இருக்கையில் அஸ்தமனமாகும் சூரியன் திடீரென்று ஜொலிப்பதுபோல் தனக்கு மறுபடியும் மகா சம்பத்து வந்துவிட்டதாக வெளியிட்டான். இதைக்கேட்டு நம்பக்கூடாமல் எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். மறுபடியும் தைமன் ஓர் பெருத்த விருந்துசெய்யப்போகிறதாகத் தெரிவித்தான். முன் தன் வீட்டுக்கு வழக்கமாய் வந்துகொண்டிருந்த விருந்தினரையும், பிரபுக்களையும், சீமாட்டிகளையும், இன்னும் அத்தேனே நகரத்தில் பெருமையும் நாகரீகமும் உள்ள சிங்கார புருஷர்கள் எல்லோரையும் வரவழைத்தான். மகா பிரபுக்களான லூசியஸ், லுகல்லஸ், வெண்டீடியஸ், ஸெம்புரோனியஸ் என்பவர்களும் மற்றுள்ள கனவான்களும் வந்தனர். இச்சகம் பேசி வயிறுவளர்க்கும் அந்தத் துராத்துமாக்கள் எல்லோரும் "ஐயோ நாம் அநியாயமாய் மோசம்போய் விட்டோம். தைமன் நம்முடைய அன்பைச் சோதிக்கத் தனக்கு வறுமைவந்ததுபோல் வேஷம்போட்டான். அவன் செய்த தந்திரத்தை நாம் தெரிந்துகொண்டிருந்தால் கேட்டதை உடனே கொடுத்து அவனிடத்தில் எளிதில் வெகு மேன்மையடைந்திருக்கலாமே" என்று நினைத்து ஒருவரும் அடையாத விசனத்தை அடைந்தார்கள். வெகு உதாரியான தைமனுடைய பெருத்த சம்பத்து வறண்டுபோனதாக அவர்கள் எண்ணியிருந்தார்கள். இப்பொழுது அது முன்போலவே குறைவின்றிப் பெருகத் தலைப்பட்டதைக் கண்டு அவர்களுக்கு உண்டான சந்தோஷம் நம்மால் சொல்லிமுடியுமோ! அவர்கள் தைமனைப் பார்த்து, "மகாப்

பிரபு, இவ்வளவு கவுரவமுள்ள சிநேகிதராகிய தாங்கள் கேட்டனுப்பியபொழுது எங்களிடத்தில் பணமில்லாமல் போய்விட்டதே. எங்கள் துரதிஷ்டத்தை என்னசொல்லுவோம். அதை நினைக்க நினைக்க எங்களுக்கு வெகு விசனமும் வெட்கமும் உண்டாகிறது" என்று தங்களுக்குத் தாங்களே பல நிஷ்டூரங்களைச் சொல்லிக்கொண்டு மாரீச வேஷம் போட்டார்கள். அதற்குத் தைமன் "சிநேகிதர்களே, அந்த அற்பவிஷயங்களைப்பற்றி ஏன் சிந்திக்கிறீர்கள். நான் அவற்றை முற்றும் மறந்துவிட்டேன்" என்றான். இந்த இச்சகம் பேசும் பிரபுக்களெல்லோரும் தைமனுக்கு வறுமைவந்தபோது, அவனுக்கு ஒரு காசு கூடக் கொடுக்கமாட்டோம் என்றார்கள். இப்பொழுது அவன் சம்பத்து அஸ்தமிக்கும் சூரியனுடைய பேரொளியைப்போல் மறுபடியும் பிரகாசிக்கையில், அவன் வீட்டுக்கு வரமாட்டோமென்றார்களா? எல்லோரும் வெகு துரிதமாய் வந்துசேர்ந்தார்கள்; இது ஆச்சரியமல்ல. "வசந்தம் இருக்கும் இடத்தில் குயில்" என்பதுபோல் எங்கே சம்பத்தும் பெருமையும் இருக்கிறதோ அங்கே இந்த ஈனர்கள் கூட்டங்கூடுவது வழக்கந்தானே. அக்குயில்கள் மாரிகாலம் வரப்போகிற சங்கதி தெரிந்தவுடனே எப்படி மறைந்துவிடுகின்றனவோ அப்படியே அவர்களுக்கு வறுமைவரப்போகிற சேதிதெரிந்து, அந்த நீசர்கள் விலகிப்போகிறார்கள். இவ்வாறு மனிதரும் வசந்தகாலத்துப் பறவைகளை ஒத்திருக்கின்றனர். தான் அழைத்தவர்கள் எல்லோரும் வந்து சேர்ந்தவுடனே சங்கீத வாத்தியம் முழங்கிற்று. வெகு ஆடம்பரத்துடன் சுடச்சுட ஆவி எழும்பும்படி பல பாத்திரங்களைக் கொண்டுவந்து வைத்தார்கள். அவற்றைப் பார்த்தவுடனே வந்த விருந்தாளிகளெல்லாம் "ஆ! கடன்காரனைப்போன தைமனுக்கு இவ்வளவு பெருத்த விருந்

தைச்செய்யும் பணம் எங்கிருந்து வந்தது. இது உண்மையோ! அல்லது கனவோ! நம்முடைய கண்கள் மயங்கிப்போயினவோ!" என்று சற்றுநேரம் வியந்தபின் தைமன் ஓர் சைகைசெய்தான்; உடனே வேலைக்காரர் பாத்திரங்களைத் திறந்தார்கள். அப்புறம் அவன் தாற்பரியம் இன்னதென்று வெளிப்பட்டது. தைமன் வெகு விலையும் உருசியும் உள்ள உணவுகளோடு கூடிய ராஜபோசனத்தைச் சாப்பிடுபவன். ஆகையால் அவன் சம்பத்துடன் இருந்தநாளில் அவன் மேசையின்மீது வைக்கப்பட்ட பாத்திரங்களில் தூரதேசங்களிலிருந்து வரவழைக்கப்பட்ட வெகு மதுரமான பல வஸ்துக்கள் வேண்டியமட்டும் இருக்கும். அப்படியே இப்பொழுதும் இருக்கும் என்று வந்த விருந்தாளிகள் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஆனால் தட்டுக்களைத் திறந்தவுடனே அவற்றில் தைமனுடைய வறுமைக்குத்தக்கதாய் செய்து வைத்திருந்தது வெளிப்பட்டது. அதாவது, கொஞ்சம் ஆவியும் உஷ்ணமுமுள்ள தண்ணீரேயாம். மனதில் வஞ்சகத்தை வைத்துக்கொண்டு உதட்டில் உண்மையான சிநேகம் உள்ளவர்போல் பேசும் அந்த மோசக்காரர் கூட்டத்துக்கு அது தகுந்த விருந்தல்லவா? அந்த ஆவி எப்படி எழும்பிப் போய்விட்டதோ அப்படியே அவர்கள் சொன்னதெல்லாம் பொய்யாய்ப்போயிற்று. அதின் கீழ் இருந்த தண்ணீரானது எப்படி ஈரமில்லாமல் சற்றுச்சுட்டும் சுடாததுமாய்த் தரையில் ஓடிப்போயிற்றோ, அப்படியே அவர்களுடைய இருதயங்களும் அன்பும் நிலையில்லாமற்போயின. இப்படித் தங்களுக்கு தைமன் செய்த விருந்தைப்பார்த்து, அவர்கள் ஆச்சரியத்தினல் திடுக்கிட்டிருக்கையில் அவன் அவர்களைப் பார்த்து: "நாய்களே தட்டுக்களைத் திறந்து நக்கிக் குடியுங்கள்" என்றான். இதைக்கேட்டு அவர்களுக்குண்டான

ஆச்சரியம் தீராததற்கு முன்னமே அவற்றிலுள்ள தண்ணீரை வேண்டியமட்டும் அவர்கள் முகத்திற்கொட்டித் தட்டுமுட்டுக்கள் எல்லாவற்றையும் அவர்கள்மேல் எறிந்தான். இதைக்கண்டு அங்கு வந்திருந்த பிரபுக்கள் சீமாட்டிகள் முதலிய எல்லோரும் அவசரத்தில் கை கால் ஆடாமல் தங்கள் தலைக்குட்டைகளை எடுத்துக்கொண்டு வெகு அலங்கோலமாய் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து ஓடிப்போனார்கள். தைமன் அவர்களைப் பின்தொடர்ந்து "இனிமையாய் நகைக்கும் இச்சகவாதிகளே! மரியாதை வேஷம்போடும் மறவரே! கொஞ்சிக்குலாவும் கோனாய்களே! கடுமையுள்ள கரடிகளே! செல்வத்தில் பிடுங்கித்தின்னும் திருடரே! விருந்துக்கு விங்கிவரும் வீணரே! கொழுத்தபோது கடிக்கவரும் கொசுகுகளே!" என்று அவர்களுக்குத்தக்க பல் பெயர்களால் அவர்களைத் திட்டிக்கொண்டே ஓடித் துரத்தினான். அவர்கள் எவ்வளவு சந்தோஷத்தோடு உள்ளே வந்தார்களோ அதைக்காட்டிலும் விசேஷ சந்தோஷத்தோடு அவனிடத்திலிருந்து தப்பிக்கொண்டு ஓடிப்போனார்கள். ஓடுகிற அவசரத்தில் சிலர் அங்கிகளையும் தலைக் குட்டைகளையும், சிலர் ஆபரணங்களையும் இழந்தனர். அவர்களுக்கெல்லாம், அந்த வேளையில் வெறியனைப்போல் தங்களைத் துரத்திவந்த தைமன் பிரபுவினிடத்திலிருந்தும், அவன் செய்த ப்ரிகாச விருத்தால் தங்களுக்குண்டான அவமானத்திலிருந்தும் தப்புவித்துக்கொண்டு ஓடிப்போனால் போதுமென்றிருந்தது.

இதுதான் தைமன் செய்த கடைசி விருந்து. அதனோடு அவன் அத்தேனே நகரத்தையும் மனிதர் சங்கத்தையும் விட்டுக் காட்டுக்குப்போனான். அந்த நகரத்தினிடத்திலும் சாதாரணமாய் மனிதஜாதி எல்லாவற்றினிடத்திலும் அவனுக்கு வெகு வெறுப்பு உண்டாய்விட்டது.

ஆகையால் "இந்தப் பாழான பட்டணத்தின் சுவர்கள் அப்படியே பூமிக்குள் அழுந்திப் போய்விடவேண்டியது; அதிலுள்ள வீடுகளெல்லாம் குடியிருப்பவர்மேல் இடிந்து விழவேண்டியது; மனிதரைப் பீடிக்கும் யுத்தம், கொடுமை, வறுமை, நோய் முதலிய பெருந்துன்பங்களெல்லாம் அங்குள்ள ஜனங்கள்மீது விழுந்து, அவர்களை வாரிக்கொண்டு போகவேண்டியது; தருமதேவதைகள் சிறியோர், பெரியோர், உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்று பாராமல் அத்தேனியருக்கெல்லாம் பொல்லாத மாறுாட்டத்தை உண்டு பண்ணவேண்டியது" என்று பலவாறு சாபம் இட்டான். அப்புறம் "காட்டிலிருக்கும் மிருகங்களில் வெகு கொடுமையுள்ளதுகூட மனிதனைக்காட்டிலும் அன்புள்ளதாயிருக்கும்" என்று சொல்லி, காட்டுக்குப்போனான். மனிதமாதிரிக்குரிய அடையாளம் ஒன்றும் தன்மேல் இருக்கக்கூடாதென்று தன் துணிகளையெல்லாம் கழற்றி எறிந்து நிர்வாணமானான். வாசம் செய்ய ஓர் குகையைத் தோண்டிக்கொண்டான். மிருகத்தைப்போல் தனியாய் ஜீவித்தான். காட்டிலுள்ள கிழங்குகளைத் தின்றான். நீரைக்குடித்தான். மனிதன் முகத்தைப்பாராமல் ஓடிப்போனான். மனிதனைக் காட்டிலும் காட்டுமிருகங்கள் குற்றமற்றவை, அன்புள்ளவையென்று அவற்றின் கூட்டத்தில் சேர்ந்து உலாவினான்.

முன் அத்தேனே நகரத்தில் அகண்ட ஐசுவரியத்தோடு எல்லாருக்கும் சந்தோஷம் உண்டுபண்ணிக்கொண்டிருந்த தைமன் பிரபுவுக்கும், இப்பொழுது மனிதரை வெறுத்து நிர்வாணமாய் வனவாசம் செய்துகொண்டிருந்த தைமனுக்கும் எவ்வளவு வித்தியாசமுண்டாய்விட்டது. அவன்முன் இச்சகம் பேசினவர்கள் எல்லாம் இப்பொழுது எங்கே? முன் அவன் படுக்கைக்குப்போகையில், அவன் வீட்டு விசாரணைகாரன் க்ஓடிவந்து குளிராமல் இருக்கும்படி

உஷ்ணமான உடுப்புக்களை அவனுக்குப் போடுவான். இப்பொழுது காட்டில் உரத்த சத்தத்தோடு அவன்மேல் சில்லென்று வீசும் காற்று அவனுக்கு அந்த உபசாரம் செய்யுமா? கூளிப்பறவைகள் வெகுகாலம் பிழைத்திருக்கும். அவற்றைக்காட்டிலும் அவ்வனத்தில் பற்பல விருட்சங்கள் வெகுகாலம் வளர்ந்து கரடு பாய்ந்திருந்தன. அவைகள் உல்லாசமான சிறு வேலைக்காரப் பயல்களாய் தைமன் அனுப்பிய இடத்திற்கு துடைதட்டிக்கொண்டு ஓடுமா? முன் அவன் இரவில் விசேஷமாய் உண்டு வயிற்றில் அசீரணம் தட்டினல், மறுநாள் காரமாய் ரசங்களையும் குழம்புகளையும் பண்ணச்சொல்லிச் சுடச்சுட சாப்பிடுவான்; இப்பொழுது காட்டில் விரல்வைத்தால் அற்றுப்போகும்படி மாரிகாலத்துப் பனியால் கட்டிப்போன கால்வாய் ஜலம் அவற்றை அவனுக்குச் செய்துகொடுக்குமா? அல்லது அந்த மகாவனத்தில் திரியும் மிருக ஜந்துக்கள் அவன் அண்டையில் வந்து அவன் காலை நக்கி வீண் ஸ்துதிசெய்யுமா?

அங்கே ஒருநாள் தன் அற்ப ஆகாரமாகிய கிழங்குகளைத் தோண்டியெடுக்கப் பூமியில் வெட்டிக்கொண்டிருக்கையில், அவன் மண்வெட்டிக்கு ஏதோ பளுவான ஒரு வஸ்துத் தட்டுப்பட்டது. அதை எடுத்துப்பார்க்கையில் தங்கநாணயமாய் இருந்தது. யாரோ ஒரு லோபி அபாயம் நேரிட்டகாலத்தில் அதைப் புதைத்துவைத்துப் பயம் நீங்கினவுடனே மறுபடியும் வந்து எடுத்துக்கொண்டு போகலாமென்று நிச்சயித்திருக்கவேண்டும்; ஆனல் அப்படிச் செய்யச் சமயம் வாய்ப்பதற்குமுன் தன் இரகசியத்தை ஒருவரோடும் சொல்லாமல் இறந்துபோனதினல் அது அப்படியே இருந்தது. பூமி எல்லா உலோகங்களுக்கும் தாய் போன்றது. மேற்சொன்ன தனம் அப்பூமியில் இருந்து வெளிப்படாததுபோல், பிரத்தியேகமாய் நன்மைதின்மை

கள் ஒன்றுக்கும் உபயோகப்படாமல் ஆழத்தில் புதைந் திருந்தது. அகஸ்மாத்தாய் தைமனுடைய மண்வெட்டிக் குத் தட்டுப்பட்டதினுல் இப்பொழுது வெளிப்பட்டது.

இப்படி அவனுக்கு அகப்பட்ட தனத்தை முன்போ லவே செலவழிக்கும் அபிப்பிராயம் தைமனுக்கிருந்தால், அவனுடைய இஷ்டர்களும் இச்சகவாதிகளும் ஒரு நொடி யில் அவனிடம்வந்து சேர்ந்திருப்பார்கள்; ஆனுல் வஞ் சனையே வடிவமான இவ்வுலகத்தின் விஷயத்தில் தைம னுக்கு மனம் சலித்துப்போய்விட்டது. தங்கத்தைப்பார்த் தால் விஷத்தைப் பார்ப்பதுபோல் இருந்தது. அதை மறுபடியும் புதைத்துவிடலாமென்று நினைத்தான். உடனே "ஆ! இத்தங்கத்தினுல் அல்லவோ மனிதருக்கு எண்ணி றந்த துன்பங்கள் விளைகின்றன. பொன்னுசையினுல் அல் லவா களவு, கொடுமை, அநீதி, இலஞ்சம், இம்சை, கொலை முதலியவைகளெல்லாம் மனிதருக்குள் நடக்கின்றன; தற் செயலாய் நமக்கு அகப்பட்ட இப்பொன்னை நாம் ஏன் விணுய்ப் புதைத்துவிடவேண்டும்? அதை வைத்துக்கொண் டிருந்தால், ஏதோ ஒரு தீமையை விளைவித்து மனிதரைப் பீடிக்க நமக்குச் சமயம் நேரிடும்" என்று எண்ணினுன். இவ்வாறு தன் இனத்தினிடத்தில் தைமனுக்குக் கொடிய துவேஷம் உண்டாய்விட்டது. அந்த வேளைக்குச்சரியாய் அக்காட்டில் சில போர்ச்சேவகர்கள் போய்க்கொண்டிருந் தனர். அவர்கள் அத்தேனே சேனுபதியான ஆல்ஸிபியா டீஸ் என்பவனுடைய சைனியத்தில் சேர்ந்தவர்கள். அத் தேனியர் இயல்பாகவே வெகு நன்றியற்றவர்களென்று பேர் போனவர்கள். அவர்கள் தங்களுடைய உத்தமமான சேனு பதிகளுக்கும் மித்திரருக்கும் அடிக்கடி வெறுப்பு உண்டாக் கிக்கொண்டு வந்தனர். அப்படியே அத்தேனே நகரத்தி லுள்ள இராச்சியபரிபாலன சபையார் ஆல்ஸிபியாடீஸ் என்

பவனுடைய மனதுக்கு ஏதோ ஒரு பெருத்த அதிருப்தியை உண்டுபண்ணினார்கள். அந்த வருத்தத்தினால், அவன் முன் அத்தேனியரை இரட்சிக்கும்பொருட்டு நடத்திக் கொண்டுபோய் வெற்றியடைந்த சேனையையே அவர்கள் மேல் திருப்பி யுத்தத்திற்குப் போய்க்கொண்டிருந்தான். இதைக்கண்டு தைமன் வெகு சந்தோஷத்தை அடைந்தான். அச்சேனாபதியின் போர்ச்சேவகர்களுடைய சம்பளத்துக்காகத் தன்னிடத்தில் இருந்த தனத்தைக் கொடுத்தான். அப்புறம் அவனைப்பார்த்து, "அப்பா ஆல்ஸிபியாடீஸ், நான் கொடுத்த பணத்துக்குப் பதிலாக நீ வேறொரு உபகாரமும் செய்யவேண்டாம். உன்னுடைய வெற்றிச் சேனையினால் அத்தேனே நகரத்தை இடித்துத் தரையோடு தரையாய் நிரவிவிடு. அதின் குடிகளையெல்லாம் நெருப்புப் போட்டுக் கொளுத்திக் கண்டம் கண்டமாய்த் துண்டித்து நாசமாக்கு. கிழவருடைய நரைத்த மயிரைப்பார்த்து மயங்கி அவர்களை விட்டுவிடாதே. அவர்களெல்லோரும் அதிக வட்டிவாங்கும் அநியாயப்பாவிகள். இளங்குழந்தைகளுடைய இனிமையான நகையைக்கண்டு ஒன்றும் தெரியாத பாலகர்களென்று அவர்களைக் கொல்லாமல் விடாதே. அவர்களுக்கு வயதுவந்தால் கெட்ட துரோகிகளாய். விடுவார்கள். இரக்கத்தை உண்டுபண்ணும்படியாய் எதாவது பார்த்தாலும் அல்லது கேட்டாலும் கண்ணைக் கட்டிக் கொள். காதுக்குள் பஞ்சுவைத்து அடைத்துக்கொள். குமரி குழந்தை தாய் என்று பார்க்காமல், யார் எப்படிக் கூக்குரலிட்டு அழுதாலும் அதையெல்லாம் காதில் போட்டுக்கொள்ளாதே. அந்நகரத்தில் உள்ளவர்களையெல்லாம் ஒரே கூட்டமாய் வதைத்துவிடு. உன்னுடைய வெற்றியினால் அவர்கள் எல்லோருக்கும் பொல்லாத மாறுாட்டம் உண்டாகவேண்டியது. அப்புறம் தேவதைகள் உனக்கும்

கலக்கத்தை உண்டுபண்ணவேண்டியது" என்றான். இவ்வாறு தைமன் அத்தேனியரிடத்திலும் மனிதஜாதி எல்லாவற்றினிடத்திலும் தீராத துவேஷம் வைத்திருந்தான்.

இப்படி அவன் மனிதனுடைய இயல்புக்கு விரோதமாய் மிருகத்தைப்போல் காட்டில் தனியாய் இருக்கையில் திடீரென்று ஒருநாள் ஒரு ஆச்சரியம் தென்பட்டது. அதாவது: யாரோ ஒருவன் அவன் இருந்த குகையின் வாயில் நின்று அவனை வெகு வியப்புடன் பார்த்தான். அப்படி நின்றவன் பிளேவியஸ். அந்த சத்தியமுள்ள உக்கிராணக்காரன் தன் எஜமானனிடத்தில் வெகு பக்தியும் சிரத்தையும் உள்ளவன். ஆகையால் தன்னால் கூடிய சகாயம் செய்யலாமென்று தைமனைத் தேடிக்கொண்டுவந்து வெகு ஈனமான அக்குடிசையில் அவன் வாசம்செய்வதைப் பார்த்தான். அப்பொழுது அவன் கண்ணுக்குமுன் மகாப்பிரபுவாயிருந்த தைமனுடைய ஸ்திதி வெகு இழிவாயிருந்தது. பிறந்தபடி நிருவாணமாய் இருந்தான். காட்டுமிருகத்தைப் போல் அம்மிருகங்கள் நடுவில் வாசம்செய்தான். அவனுக்கு முன்னிருந்த செல்வமும் பெருமையும் காலகதியினால் இடிந்துவிழுந்து அவற்றுக்கெல்லாம் குறியாக அவன் தேகமாத்திரம் நின்றாற்போற் காணப்பட்டது. இதையெல்லாம் அந்த அன்புள்ள வேலைக்காரன் கண்டவுடனே வெகு கிலேசமும் பயமும் அடைந்து மனம் தடுமாறி ஒன்றும் பேசாமல் மரமாய் நின்றான். அப்புறம் சிறிது பிரயத்தனப்பட்டுச் சிலவார்த்தை சொல்லத்தொடங்கினான். அப்போது அழுகையினால் குரல் அடைத்துப்போய்ச் சரியாய்ப் பேசமுடியவில்லை. ஆகையால் அவன் இன்னானென்று தெரிந்துகொள்வது தைமனுக்கு வெகு கஷ்டமாயிருந்தது. மனிதஜாதியினிடத்தில் தனக்கு உண்டான அனுபவத்துக்கு விரோதமாய்த் தான் வெகு கஷ்டப்பட்டுக்கொண்டிருக்

கையில் அவ்வாறு சகாயம் செய்யும்படி வந்தவன் இன்னு னென்று அறிவது அவனுக்குக் கடினமாயிற்று. அன்றி யும் அவன் உருவத்தில் மனிதனுயிருந்ததினுல் அவனேயும் வஞ்சகனுகவும், அவன் கண்ணினின்றும் தாரைதாரையாய்ப் பெருகிய ஜலத்தைக் கபடக்கண்ணீராகவும் எண்ணினுன்; ஆனுல் உத்தமனுன அவ்வேலைக்காரன் பல அடையாளங் களால் தன் அன்பையும் நம்பிக்கையுள்ள குணத்தையும் நிரூபித்தான். எஜமானனிடத்திலுள்ள பக்தி சிரத்தை இவற்றைவிட தான் அங்கு வந்ததற்கு வேறுகாரணம் இல்லையென்று தெளிவாய் எடுத்துக்காட்டினுன். இதை யெல்லாம் கேட்டு உலகத்தில் உத்தமன் ஒருவன் இருப்ப தாகத் தைமன் ஒப்புக்கொண்டான். அன்றியும் அவ்வுத் தமனும் உருவத்தில் மனிதனுகையால் வெகு வெறுப்பின்றி அவன் முகத்தைப்பார்க்கத் தைமனுக்குப் பிரியமில்லாமற் போயிற்று. அவனுடைய மனித உதட்டிலிருந்து வந்த வார்த்தைகளைக் கேட்கவும் தைமனுக்குச் சுத்தமாய்ப் பிடிக்கவில்லை. இவ்வாறு மனிதனென்னும் பெயரை உடைத் தாயிருந்ததினுலும், மனிதனுக்கு இயல்பாயிருக்கும் இரு தயத்தைக்காட்டிலும் வெகு அன்பும் இரக்கமும் உள்ள வனுயிருந்தும், மனிதனுடைய பாழான உருவத்தைப் படைத்திருந்ததினுலும், அத்தேனே நகரத்துக்கெல்லாம் ஒரே தருமாத்துமாவாகிய இவ்வேலைக்காரனும் தன் எஜமா னன் முன்னில்லாமல் அப்புறம் போகவேண்டியதாய் நேரிட்டது.

இப்படி அன்புள்ள அந்த ஏழை வேலைக்காரன் வந்து போனவுடனே அவனேக்காட்டிலும் பெரிய மனுஷரான பலர் சஞ்சலமற்று வனவாசம் செய்துகொண்டிருந்த தைம னுடைய சுகத்தைக் கெடுக்கவர இருந்தனர். அத்தேனே நகரத்திலுள்ள நன்றியற்ற பிரபுக்கள் மகாத்துமாவாகிய

தைமனுக்குச் செய்த கொடுமைகளைப்பற்றி விசனப்பட வேண்டிய காலம் வந்துவிட்டது. கோபத்தினல் பொங்கி எழும்பும் காட்டுப்பன்றியைப்போல் ஆல்ஸிபியாடீஸ் அவர்கள் மதில்சுவர்கள்மேல் விழுந்து நாசமாக்கிக்கொண்டிருந்தான். இப்படிக் கொடிய முற்றுகைபோட்டு, அழகான அத்தேனே நகரத்தை நிர்த்தூளியாக்குவதாய் ஆல்ஸிபியாடீஸ் பயமுறுத்தினதினல், அத்தேனியருக்குத் தைமன் ஞாபகம் வந்தது. அவன் முன் வெகு பராக்கிரமத்தோடு செய்த பல காரியங்களை வெகு காலம் மறந்திருந்தபோதிலும், அப்பொழுது ஒன்றும் விடாமல் செவ்வையாய் நினைத்துக்கொண்டார்கள். தைமன் முன்பு அவர்களுடைய சேனுபதியாயிருந்தவன். அவன் வெகு தீரமும், அனுபோகமும் உள்ள போர்வீரன். ஆகையால் அப்போது அத்தேனே நகரத்தை முற்றுகைபோட்டு வெகு உக்கிரமாய் மேல்விழுந்து வந்துகொண்டிருந்த ஆல்ஸிபியாடீஸ் என்பவனை முறியடித்து ஓட்டத்தக்க வீரன் தைமனை விட ஒருவனும் அத்தேனியருக்குள் இல்லையென்பது அவர்களுக்கு நன்ருய்த் தெரியும்.

இவ்வாறு தங்களுக்குண்டான ஆபத்துக்காலத்தில் தைமனைப்பார்க்க இராச்சியபரிபாலன சபையாரிற் சிலர் நியமிக்கப்பட்டனர். தாங்கள் தைமனுக்கு வறுமைவந்த காலத்திற் சகாயஞ்செய்யாமல் நடுத்தெருவில் விட்டனர். இப்பொழுது அவன் தங்களுக்குச் சகாயம் செய்யவேண்டியவனென்னும் துராசையைத் தாங்களே உண்டுபண்ணிக்கொண்டனர். முன் அவனைத் தயைதாக்ஷிணியம் ஒன்றும் இல்லாமல் அடித்து ஓட்டினுர்கள். இப்பொழுது அவன் மாத்திரம் தங்களைக் கவுரவப்படுத்த வேண்டியவனுக நினைத்து அவனிடம் சென்றனர்.

அவர்கள் அவனைப்பார்த்து "மகாப்பிரபுவே! உமக்கு நாங்கள் முன் அநியாயமாய்ச்செய்த தீமைகளுக்குப் பதிலாக வேண்டிய ஐசுவரியம், அதிகாரம், கவுரவப் பட்டங்கள், பிரசித்தமாய்ச் சமுதாயத்தில் செய்யப்படும் மரியாதைகள், ஜனங்களுடைய அன்பு இவற்றையெல்லாம் தருகிறோம். எங்கள் உடல் பொருள் ஆவி மூன்றும் உமக்கே அற்பிதம் செய்கிறோம். நீர்மாத்திரம் திரும்பிவந்து எங்களை இரட்சித்தால் போதும்" என்றனர். இவ்வாறு தாங்கள் முன் அவனை எங்கிருந்து அடித்துத் துரத்தினார்களோ, அந்த அத்தேனே நகரத்துக்கே மறுபடியும் வந்து அதை இரட்சிக்கவேண்டுமென்று வெகு உருக்கமாய்க் கெஞ்சிக் கேட்டுக் கண்ணீர்விட்டு அழுதனர். முன் தைமன் அத்தேனே நகரத்துக்கெல்லாம் மகா உதாரகுண சீலனாயும், பராக்கிரம சிங்கமாயும், யுத்தத்தில் அணையாயும், மற்ற வேளையில் அப்பட்டணத்துக்கு ஓர் ஆபரணமாயும் இருந்தான்; இப்பொழுதோ அவன் அப்படிப்பட்ட பிரபுவல்ல. நிருவாணமான மனிததுவேஷி. ஆல்ஸிபியாடீஸ் தன் தேசத்தாரைக் கொன்றால் அவனுக்கு ஆக வேண்டியதென்ன. அவன் அத்தேனே நகரத்தைக் கொள்ளையடித்து அதிலுள்ள விருத்தரையும் பாலரையும் வெட்டியெறிவது தைமனுக்கு வெகு சந்தோஷமான காரியம். ஆகையால், அவன் அவர்களோடு அப்படியே சொல்லி "உங்கள் எதிரியின் பாளையத்தில் இருக்கும் கத்திகளெல்லாம் அத்தேனே நகரத்தில் மகா கனவான்கள் என்று பேர்வைத்துக்கொண்டிருக்கும் சண்டாளருடைய கழுத்துக்களைத் தப்பாமல் கரகரவென்று அறுத்துத் தள்ளவேண்டுமென்பது என் மனப்பூர்வமான கருத்து" என்று முடித்தான்.

இவ்வாறு தங்கள் கோரிக்கை ஈடேறாமல் அழுது புலம்பிக்கொண்டிருந்த இராச்சியபரிபாலன சபையாருக்குத்

தைமன் அனுக்கிரகம்செய்த உத்தரவு இதுதான். கடைசியில் அவர்கள் போகும்போது மாத்திரம் அவர்களைப் பார்த்து:—"நம்முடைய ஊராரை நான் மிகவும் விசாரித்ததாகச் சொல்லுங்கள். அவர்கள் துக்கங்களையும் கவலைகளையும் விட்டு நீங்கி ஆல்ஸிபியாடீஸ் உடைய உக்கிரமான கோபத்தின் தீமைகளினின்று தப்பித்துக்கொள்ளும்படியான ஓர் உபாயம் இன்னும் இருக்கிறது; அதை நான் சொல்லிக்கொடுக்கிறேன். நான் இறந்துபோவதற்குமுன் பிரியமுள்ள என் தேசத்தாருக்கு ஏதாவது ஒரு சகாயம் செய்யவேண்டுமென்னும் ஆசை எனக்கின்னும் இருக்கிறது" என்றான். இதைக்கேட்டுத் "தைமனுக்கு நம்முடைய நகரத்தினிடத்திலிருந்த அன்பு மறுபடியும் உண்டாய்விட்டது" என்று சற்றுத் தைரியம் அடைந்தார்கள். அப்புறம் தைமன் "நான் வாசஞ்செய்யும் குகைக்குச் சமீபத்தில் ஓர் மரம் இருக்கிறது. அதைச் சடுதியில் வெட்டிவிடுவேன். ஆகையால் அப்படி அம்மரம் வெட்டப்படுவதற்குமுன் அத்தேனே நகரத்தில் உள்ள என் சிநேகிதர்களில் விசனத்தை நீக்கிக்கொள்ள வேண்டுமென்னும் சிறியோர், பெரியோர் எல்லோரும் பேதமில்லாமல் வந்து அந்த விருட்சத்தை மாதிரி பார்த்துவிட்டுப்போகலாம்" என்றான். அவன் தாற்பரியம் என்னவெனில், அவர்கள் எல்லோரும் வந்து அந்த விருட்சத்தில் உறிபோட்டுக் கொண்டு மடிந்தால் தனக்குத்தானே அவர்களைப் பிடித்திருக்கும் விசனம் நீங்கிப்போம் என்பதே.

தைமன் மனிதருக்கு வெகு உதாரமாய் பல சகாயங்களையும் மரியாதைகளையும் செய்தான். அவற்றில் இதுதான் அவன் கடைசியில் செய்த மரியாதை. அதற்கப்புறம் அவன் சுதேசிகள் அவனைப் பார்த்ததில்லை. சிலநாளைக்குப் பின் ஓர் சாதாரணமான போர்ச்சேவகன் தைமன் சஞ்ச

ரித்த காட்டுக்குச் சமீபத்திலுள்ள கடற்கரை வழியாய்ப் போகையில் சமுத்திரத்தின் ஓரத்தில் ஓர் கல்லறையைக் கண்டான். அதின்மேல் இருந்த சாசனத்தைப்பார்க்கையில், அது மனிதத்துவேஷியான தைமனுடைய கோரி என்றும், "அவன் ஜீவித்திருக்கையில் பிழைத்திருந்த மனிதரையெல்லாம் வெறுத்தான்; இறக்கையில் அப்புறம் மிகுந்திருந்த துராத்துமாக்களையெல்லாம் ஓர் வெக்கை வந்து வாரிக்கொண்டுபோகும்படி கோரினன்" என்றும் எழுதியிருந்தது.

அவன் தன்னைத்தான் வதைத்துக்கொண்டானே அல்லது தன் பிராணனிடத்திலிருந்த வெறுப்பினாலும், மனிதரிடத்திலிருந்த துவேஷத்தினாலும் முடிவுபெற்றானே அது நன்றாய்த் தெரியவில்லை. ஆயினும் அவன் தன் கோரியின் மீது எழுதிய சாசனத்தையும், சாகிறவரையிலும் ஒரே பிடியாய்க் கொண்டிருந்த உறுதியையும் கண்டு "அவன் மனிதத்துவேஷியாய் வெகுகாலம் இருந்தான்; அப்படியே இறந்தான்" என்று எல்லோரும் வெகு வியப்புற்றனர். சிலர் "இவ்வாறு தைமன் கடற்கரையில் தனக்குச் சமாதி ஏற்படுத்திக்கொண்டதற்கு ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும். வஞ்சனையுள்ள மனிதர் இறந்தவருக்காக மனதுருகி விசனப்படுவது கிடையாது. அப்படி அவர் மேலுக்கு வீண் துக்கம் கொண்டாடுவதும் அற்பகாலம்; ஆனல் அகன்ற கடலோ அப்படியல்ல; தன் அலைகளாகிய கைகளைத் தூக்கி நீர்த்துளியாகிய கண்ணீரைப் பெருக்கி எந்நாளும் ஒரேவிதமாய் விசனப்படும் என்னும் கருத்தைக் கொண்டே இப்படிச் செய்திருக்கலாம்" என்றனர்.



Printed at the C. L. S. Press, Madras—1910.